25th March 1961]

THE HON. SRI C. SUBRAMANIAM : ஒரேமாதிரி தவறாக பெட்டிஷன் கொடுத்தால் ஒரேமாதிரிதான் பதில் வரும். விசாரணை செய்த பிறகு இது கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆகவே, கேள்வி நேரத்தில் இந்த விசாரணை செய்தது தவறு இல்லையா என்பதை விசாரணை செய்து கொண்டிருக்க முடியாது.

SRI A. A. RASHEED : May I know whether the enquiry was conducted by the Transport Department or by the Police?

THE HON. SRI V. RAMIAH : By both. கனம் நிதியமைச்சர் அவர்கள் சொன்னது முழுக்க முழுக்க உண்மை என்று என்னிடமுள்ள தகவல்களை வைத்துச் சொல்ல முடியும். வேண்டுமென்றே ஒரு சிலர் முயற்சி எடுத்துக்கொண்டு இல்லாததை எல்லாம் பற்றி புகார் செய்து, விசாரணை வரக்கூடிய நேரத்தில் பக்கத்திலே வராமல் போய் விட்டார்கள்.

*Radios in Block Development areas*

* 1072 Q.—SRI V. K. KOTHANDARAMAN : கனம் முதல் அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) வட்டார வளர்ச்சிப் பகுதிகளில் பொழுது போக்குக்காக வைக்கும் ரேடியோக்களில் எல்லா ஸ்டேஷன்களையும் கேட்க ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறதா?

(இ) இல்லையென்றால் காரணமென்ன?

THE HON. SRI C. SUBRAMANIAM : (அ) No, Sir.

(இ) According to the licences issued by the Posts and Telegraphs Department for Community Radio Receivers, listening to stations other than All-India Radio stations is not permissible.

SRI V. K. KOTHANDARAMAN: சர்க்கார் பரிபூர்ண சுதந்திரம் தந்து விட்டோம், ராமராஜ்யம் என்று சொல்லக்கூடிய இன்றைய கிராம ராஜ்யத்தில் ரேடியோக்கள் கூட குறிப்பிட்ட இன்னின்ன ஸ்டேஷன்களைத்தான் வைத்துக் கேட்கவேண்டுமென்ற அளவிற்கு நிபந்தனை போட்டு வைக்க காரணம் என்ன? எல்லா ஸ்டேஷன்களையும் கேட்பதற்கு வசதி அளிக்கக்கூடாதா? அப்படிக் கேட்டால் அவர்கள் பூரா விஷயமும் தெரிந்து கொண்டு விழிப்படைவார்கள் என்ற நோக்கமா. ஆகவே தயவுசெய்து இனிமேலாவது பரிபூர்ண சுதந்திரம் கொடுத்தோம் என்பதற்கு அறிகுறியாக எல்லா ஸ்டேஷன்களையும் கேட்க ஏற்பாடு செய்யப்படுமா?

THE HON. SRI C. SUBRAMANIAM: அங்கத்தினர் அவர்கள் கேள்வி கேட்டாரா அல்லது பிரசங்கம் செய்தார்களா என்று தெரியவில்லை. அவர் நினைக்கும் பரிபூர்ண சுதந்திரத்திற்கும் நான் நினைப்பதற்கும் அதிக வித்தியாசம் இருக்கிறது. அவர்கள் பரிபூர்ண சுதந்திர நாட்டில் எவ்வாறு ரேடியோக்கள் கேட்பது கட்டுப்படுத்தப்பட்டிருக்கிறது என்பதை அவர்கள் தெரிந்து

கொண்டிருப்பார்கள் என்று நம்புகிறேன். இங்கு லைசென்ஸ் வாங்குவதில் இரண்டு விதமிருக்கின்றன. குறைந்த கட்டணம் கொடுத்து "ஆல் இந்தியா ரேடியோ" மட்டும் கேட்கவும், மேலே இரண்டு ரூபாய் கட்டணம் கொடுத்து வாங்கினுல் ரஷ்யா, சைனு போன்ற நாடுகளைக் கேட்கலாம், எல்லா நாடுகளையும் கேட்கலாம். ஆகவே, கம்யூனிஸ்ட் நாடுகள் போன்று மற்ற ஸ்டேஷன்களைக் கேட்கக் கூடாது என்ற கட்டுப்பாடு இங்கே கிடையாது.

SRI A. A. RASHEED : ஸார், ஒரே சமயத்தில் ஒரே ரேடியோவில் எல்லா ஸ்டேஷன்களையும் கேட்க முடியுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இங்கு சிலவேளைகளில் நாம் எல்லோரும் சேர்ந்து ஒரே சமயத்தில் பேசுவதற்கு முயற்சிப்பது போல்தான்.

SRI N. MARUDACHALAM : ரேடியோ கொடுப்பது பொழுது போக்கிற்காக என்று சொல்லப்படுகிறது. அதே நேரத்தில் நகர சபைகளில் மின்சார கம்பத்தில் ரேடியோக்களை வைத்திருப்பதை அகற்றிவிடும்படி அரசாங்கம் உத்தரவிட்டிருக்கிறது, இதற்கு என்ன காரணம் ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இதைப்பற்றிய தகவல் என்னிடத்தில் இல்லை.. ரேடியோ வெறும் பொழுது போக்கிற்காக மட்டும் பயன்படுத்துவதில்லை, அறிவு புகட்டுவதற்காகவும் ரேடியோ பயன்படுத்தப்படுகிறது.

SRI V. SANKARAN : சிலர் மாஸ்கோ ஸ்டேஷன் மட்டும் கேட்கவேண்டுமென்ருல் அதற்கு மட்டும் ஏற்பாடு செய்து கொடுக்கப்படுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இதற்காக தனியாக கட்டணம் கட்டி ரேடியோவை வீட்டில் வாங்கிவைத்துக்கொண்டு உட்கார்ந்து விட்டால் மாஸ்கோ கேட்கவும் எந்த ஸ்டேஷன் கேட்கவும் எந்தவிதமான தடையும் இருக்காது.

*Sethusamudram Project and Tuticorin Port (III Plan)*

*1073 Q.—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Works be pleased to state—

(*a*) the steps taken by the Government to represent to the Centre to include Sethusamudram Project and development of Tuticorin Port in the Third Five-Year Plan; and

(*b*) if so, the details thereof?

THE HON. SRI P. KAKKAN : (*a*) & (*b*) The need for taking up both the Sethusamudram Project and the development of Tuticorin as an all-weather Port during the Third Plan has been repeatedly urged by the Madras Government with the Government of India in writing and at various Conferences, including discussions at Ministerial level. As a result, preliminary investigation by putting trial bores is being carried on with the approval of the Government of India to arrive at a fairly accurate estimate of the